உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஜய - தை - 2015 - ஜனவரி இதழ் - 31

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்






தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

அத்தியுரி போர்த்தசிவன் அம்புலியைத் தாங்குபரன்
அருச்சுனர்க்குப் பாசுபதம் அளித்த தேவன்
அன்றுமறை நான்குரைத்துத் திருமுறையின் உட்கலந்து
சோதியென அம்பலத்தில் ஆடி னானை
ஆடகமா மதுரைநகர் அன்றாளச் சுந்தரனாய்
அவதரித்த திருக்கயிலைத் தெய்வக் கோவை
அக்கமணி கொன்றைஅணி அரன்கொற்ற வாளீசன்
அடியர்பணி தினம்புரிய அருளும் நாதன்

கத்துகடல் சூழ் நாகைக் கச்சியே கம்பமுடன்
காறாயில் ஐயாறு காழி தில்லை
கழுக்குன்றம் மறைக்காடு கவினார்ந்த கோலக்கா
காவிரிபாய் ஐயாறு திருமாற் பேறு
கரவீரம் தோணிபுரம் திருப்பனையூர் திருப்பழனம்
கயிலாயம் திருக்கானூர் ஆரூர்க் கோயில்
கள்ளிலுடன் இடைமருதூர் பிரமபுரம் முதுகுன்றம்
கழிப்பாலை குடவாயில் குடந்தை நல்லம்

இத்தலத்தோ(டு) எத்தனையோ தலங்களிலே இருந்தருள்வான்
இதயத்தில் ஓவியமாய் இருக்கும் மாது
இடக்கையில் தீயேந்தி வலக்கையில் துடியேந்தி
இடைஒசிய ஆடுவான்தன் எழிலைக் கண்டே
இருவிழிகள் களித்தாட என்றென்றும் களித்திருக்கும்
எங்கள்திரு நெல்லைவாழ் கழனி வாசல்
என்றென்றும் காத்துவரும் இனியதொரு பெருமாட்டி
எமக்கெனவே இத்தலத்தில் இருக்கின் றாளைப்

பத்தியுடன் பணிகின்ற அடியவர்தம் பாவம்நீக்கிப்
பாலிக்கும் பாசமலர் முகத்தி னாளைப்
பசியவயல் இருந்துமயில் ஆட,சை குயில்பாடப்
பயில்வேத மொழிகளெலாம் கிள்ளை பேசப்
பாசமெனும் நிகளத்தைத் தான்அறுக்கும் படிவரம்கேள்
பலமுனிவர் தினம்பயிலும் மடத்தில் வந்து
பயில்கின்ற போதருளும் திருநெல்லை பாதமலர்
பணிவார்பால் தீங்கென்றும் படரா தாமே

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

அன்பர்களின் நன்னெறி, பக்திநெறி வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒரு பண்பு புலன் அடக்கம். சாதாரணமாகப் புலன் அடக்கம் என்றாலே பால் என்ற விவகாரங்களைப் பற்றி மட்டுமே சிந்திப்பதும் நினைப்பதும் வழக்கமாக உள்ளது. பொறிகளிலே மூக்கும் அடுத்தபடியாகக் காதும் தான் குறைவான தவறுகளைச் செய்கின்றன. மற்றைய மூன்று பொறிகளும் மனிதனுடைய உயர்வு தாழ்விற்கு முக்கியமான காரணங்களாக அமைகின்றன.

இந்தப் புலன்களில் ஏதேனும் ஒன்று தேவையற்ற சூழ்நிலைகளிலே தரமற்ற முறையிலே நடந்து கொள்ளுமானால் அந்த மானுடர்க்குத் திண்ணமாகத் தேவையற்ற இடையூறுகளும் தண்டனைகளும் வந்து சேரலாம். இப்படிச் செயல்படுகின்ற ஐம்பொறிகளிலே வாய் முக்கியமான பங்கை வகிக்கின்றது. தேவையற்றவற்றைப் பேசுவதும், உண்பதும் வாயினுடைய செயலாக அமையுமேயானால் சம்பந்தப்பட்ட மனிதன் உடலாலும் உள்ளத்தாலும் வருந்த நேரலாம்.

எனவே தான் வள்ளுவர்

**"யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்**
**சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு"**

என்று வாய் அடக்கத்தை மிக வற்புறுத்திக் கூறினார்.

உலகிலே பல வகைப்பட்ட பகைகளுக்குத் தகாத வார்த்தைகளே காரணமாகின்றன. சேர்ந்தாரைக் கொல்லும் சினம் வெளிப்படுவது வாய் மூலமாகவே. எனவேதான், மனிதர்களுடைய முக்கியமான பண்புகளிலே நாவடக்கம் ஒன்றாகக் கருதப்படுகின்றது. நாவடக்கம் பயில்வதற்கு நல்ல சிந்தனைகள், நல்ல எண்ணங்கள் மனதில் வளர வேண்டும். ஒரு முறை செய்த தவறுகளிலிருந்து தன்னைத் திருத்திக் கொள்கின்ற பழக்கமும் ஏற்பட வேண்டும். எவ்வளவு உயர்ந்த குணங்களைக் கொண்டவராக இருந்தாலும் கோபமான சூழ்நிலையிலே தகாத வார்த்தைகளைப் பேசுவது, பாலில் துளி விஷம்

கலந்தது போல் ஆகும். அது அவர்களுக்கு இழிவு தருவது மட்டுமல்ல; சமயங்களில் சரிவையும் தரலாம்.

நாவடக்கம் பயில்வதற்கு ஓர் அருமையான வழி வார்த்தைகளை வெளியே உமிழும் முன் 1/2 நிமிடம் சிந்தித்தல். அதனை விட மேலான வழி மௌன விரதம் பயிலுதல். வாரத்தில் ஒரு நாள் அல்லது நாளில் ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் பேசாமல் இருப்பது; அது மட்டுமல்ல; அன்றைக்கு / அந்த நேரத்தில் எந்த விதமான கருத்துக்களையோ எண்ணங்களையோ வெளியிடாமல் இருக்கப் பயில்வது. இது மிகக் கடுமையான பயிற்சி.

ஆனால் இதனை ஏறக்குறைய 50 ஆண்டுகளாகக் கடைப்பிடித்து வருகின்ற மகான் ஒருவர் நம்மிடையே வாழ்கின்றார். (ருத்தினகிரி பாலமுருகன் அடிமை அவர்கள். பார்க்கின்ற பொழுதெல்லாம் அடங்கா வியப்பும் மௌன விரதம் இருக்க வேண்டும் என்ற ஆர்வமும் எனக்கு வெளிப்படுகின்றன. ஆனால் இந்தப் பயிற்சி சித்திக்கவில்லை.) அதனாலே மௌனப்பயிற்சி எல்லாருக்கும் கிடைக்கக்கூடியது என்றே தெரிகிறது. எனவே முதலில் நிமிடக்கணக்கில் தொடங்கி மௌன விரதத்தைப் பயில முயல்வோம்.

இதைப்போல உணவுக் கட்டுப்பாடும் மிக்க இன்றியமையாதது. தங்களுடைய உடலுக்கு ஏற்ற உணவு எவை என்பது அவரவர்க்கு நன்றாகத் தெரிந்திருக்கும். ஆனால் நாக்கின் கட்டுப்பாட்டில் உள்ள மனிதர்கள் எந்தக் கட்டுப்பாட்டையும் மதிப்பதில்லை. அது நீரிழிவு, இரத்தக்கொதிப்பு, அஜீரணத்தால் ஏற்படக்கூடிய தொந்தரவுகள், நரம்புத்தளர்ச்சி என எல்லா வகையான நோய்களையும் நாம் கேட்காமலே அள்ளித்தரக்கூடிய வாய்ப்புகள் அதிகம். முடிந்தவரையிலே புலால் உண்ணாமை என்பதை விரதமாகக் கொள்வது நலம் பயக்கும்.

எனவே உண்பதும் சரியான நேரத்தில் உண்பதும் ஆரோக்கியத்தை வளர்த்திடும். ஆகவே, நாவை இருவகைப் பயன்பாட்டிலும் நம்முடைய கட்டுப்பாட்டிலும் வைத்து நலம் பெறுவோமாக!

*ஆசிர்வாதங்கள் ! ஸ்ரீ சற்குருநாதன் துணை*

தவத்திரு குமார தேவர் அருளிய

# மகாராஜா துறவு (தொடர்ச்சி)

## குருவின் உபதேசம்

29. இருவகைச் சார்வாம் புறப்பற்றை நீக்கி
இச்சையின் மீட்டுஅதின் நினைவும்
ஒருவியே உடல்கா வலையும்கை விடுத்தே
உள்கர ணங்கள்வா தனையும்
குருஅருள் நெறியே ஒடுக்கிடில் வீடும்
கூடும்தா னாகவே பவத்தின்
கருஅழிந் திடும்இந் நெறியைநீ விரைவில்
கைக்கொண்டு செல்என உரைத்தான்.

முனிவரும், அரசனே! உலகம், அதிலுள்ள இன்பம் ஆகிய இரண்டையும் என்னுடையன என எண்ணும் புறப்பற்றுக்களை நீக்கி, அவற்றின் பழக்கத்தால் உண்டான ஆசையில் இருந்து மனத்தைத் திருப்ப வேண்டும். அதன் நினைவும் இல்லாமல் நீங்கி உடல் பாதுகாப்பையும் கைவிட வேண்டும். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற உள்கருவிகள் நான்கையும், அதில் உட்பகை உண்டாவதற்குக் காரணம் ஆகிய காம, குரோத, லோப, மோக, மத, மாற்சரியம் என்பவற்றின் தொடர்புகளையும், ஞானாசிரியர் உபதேசித்த வழிப்படி அடக்கினால் வீடுபேறு கிடைக்கும். அதனால் பிறப்புக்குக் காரணம் ஆகிய அஞ்ஞானம் தானாகவே அழிந்து போகும். நீ விரைவாக இந்த வழியைக் கைக் கொண்டு செல்லக் கடவாய் என்று கூறி அருளினார்.

## மகாராசன் குருவின் உபதேச மொழிகளைத் தனியே இருந்து சிந்தித்தல்

30. அந்நெறி குருவால் ஐயமும் திரிவும்
அகன்றிடத் துணிவதாக் கேட்டு
முன்நெறி யான அரசுஇயற் கையினில்
முயன்றனன் சிறிதுநாள் ஒருநாள்

பின்நெறி அதனை நினைந்துஅனை வரையும்
பெயர்ந்திட விடைகொடுத்து அரசன்
மன்நெறிக் கோலம் அகன்றுஅந்தப் புரத்தில்
வதிந்தனன் ஒருவனாய்த் தனித்தே.

அரசனும் ஞானாசிரியர் கூறிய செய்திகளை அறிந்து அவற்றில் இருந்த ஐயங்களும் நீங்கி, ஞானவேட்கையுடனேயே செங்கோல் ஆட்சியைச் சிறிது காலம் நடத்தினான். பின் ஒரு நாள் தான் காட்டில் முனிவர்பால் பெற்ற உபதேசத்தைச் சிந்தித்தவாறு, அனைவரையும் அவையிலிருந்து செல்லப் பணித்தான். பின் தன்னுடைய அந்தப்புரம் சென்று தன் அரச கோலத்தைக் கைவிட்டுத் தனியே இருந்தான்.

**தன்னை நாடி வந்த அரசர் முதலானோர்க்கு**
**நான் துறவை நாடிச் செல்கின்றேன்,**
**வேறு ஒருவரை அரசனாக்கிக் கொள்க என்று கூறுதல்**

31. அரசர் அமைச்சர் புரோகிதர் பெரியோர்
அனைவரும் அவ்விடத்து ஏகி
அரசனை நோக்கி நித்திய கருமம்
அகன்று வாளா இருந்திடுதல்
அரசு இலக்கணம் அன்றுஎன அவர்வேண்ட
அவர்களை நோக்கியே வேந்தன்
அரசுஇ யற்கையினை வேண்டலன் என்னை
அறியவே வேண்டினன் அன்றே.

அவனைச் சார்ந்த பிற அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், மந்திரிமார்கள், புரோகிதர், பிற பெரியோர்கள் ஆகிய அனைவரும் அரசன் இருக்கும் அந்தப்புரம் சென்றனர். பின் அரசனை நோக்கி, "தினமும் செய்யும் கடமைகளையும் செய்யவில்லை. இவ்வாறு சும்மா இருத்தல் அரசனுக்கு உரிய இலக்கணம் ஆகாது. எனவே அரசைக் கவனிக்கவும்" என்று வேண்டினர். வேந்தனும் அவர்களை நோக்கி "அரசாட்சியை நான் விரும்பவில்லை. என்னையே நான் அறிந்து கொள்ள விரும்புகின்றேன்" என்றான்.

32. ஆண்டதுஓர் அரசு தனிலும் போகத்தும்

ஆசைஅற் றேன்இனி வேண்டேன்

மாண்டதுஓர் வனத்தில் ஒருவனாய்த் தனித்தே

மனத்துஅசைவு அறுத்துவீடு அடைவேன்

பூண்டஎன் மனம்இங்கு இனித்தி ரும்பாது

போகத்தைப் பொருள்என எண்ணி

வேண்டலன் நீங்கள் அரசனா வேறே

விதித்துக்கொ ளுங்கள்என்று உரைத்தான்.

மேலும், "நான் இதுவரை ஆண்டு வந்த ஒப்பற்ற இந்த அரசாட்சியையும் உலக இன்பத்தில் உள்ள ஆசைகளையும் நீக்கி விட்டேன். இனிமேல் அவற்றை விரும்ப மாட்டேன். மாண்புடைய கானகத்தில் ஒருவனாய்த் தனியே இருந்து, மனத்திலே உள்ள கலக்கம் நீக்கி வீடுபேற்றை அடைவேன். இத்தகைய வைராக்கியம் கொண்ட என் உள்ளம் இன்பத்தை ஒரு பொருள் என மதிக்காது. நீங்கள் வேறு ஒருவனை அரசன் ஆக்கிக் கொள்ளுங்கள்" என்று உரைத்தான்.

**அரசாட்சியை விடலாகாது என்றனர் அமைச்சர்**
**அரசனோ ஆட்சித் துன்பத்தைக் கூறிக் காடு செல்லுதல்**

33. ஆதியில் நினது தாதையும் நினையே

அரசினின் இளமையில் சூட்டத்

தீதுஇன்றி உனது புயவலி மையினில்

செகமதைத் தாங்கினை இனிமேல்

நீதியின் நுணிய மதியின் ஆதரவில்

நின்னைப்போல் ஒருவர்மற்று உளரோ

ஈதுஇயற் கையது அன்றுஇவ் உடலுடனே

இச்செல்வம் அன்றிவே றுளதோ.

"மன்னனே! முற்காலத்தில் உனது தந்தையும் உன்னை இளமைப் பருவத்திலேயே அரசனாக முடி சூட்டினார். நீயும் உன்னுடைய தோள் வலிமையால் தீங்கு இன்றி இவ்வுலகைப் பாதுகாத்து வந்தாய். அத்தகைய நீ காடு சென்றால் நீதி முறைப்படி

ஒழுங்குடன் அறிவாலும் அன்பாலும் அரசு செலுத்த உன்னைப் போல யாரும் இருக்கின்றார்களா? நீ கருதும் இச்செயல் உலகியற்கைக்குப் பொருந்துவது அன்று. இந்த உடலுக்குரிய சுகபோகங்களையும் செல்வத்தையும் தவிர மனிதர் அடையத் தக்க பொருள் வேறு உள்ளதோ?"

34. அலது நீ ஏகின் அவனியும் காப்புஅற்று
அவத்திலே அலைந்திடும் யாமும்
சலனமது உறுவேம் இத்தகை எமைநீ
தவிக்கவிட்டு ஏகுதல் கடன்அன்று
இலகிட எமக்குஈது அருள்என அமைச்சர்
இயம்பிட அரசனும் பார்த்தே
உலகம்மெய் எனஎண் ணுறும்மதி உடையோர்க்கு
உரைப்பினும் உணர்வுஉதி யாதால்.

"இவை தவிர நீ காட்டிற்குச் சென்றால் இவ்வுலகம் பாதுகாப்பு இன்றி வீணாக அலையும். நாங்களும் சஞ்சலம் அடைவோம். இவ்வாறு எங்களை நீ பரிதவிக்க விட்டு விட்டு வனம் செல்லுதல் முறையன்று, நன்கு விளங்க எமக்கு அருள்வாயாக" என்று அமைச்சர்களும் கூறினர். அது கேட்ட அரசனும் அவர்களை நோக்கி, "இவ்வுலக வாழ்வானது உண்மை என நினைக்கின்றவர்களிடம் உலகம் நிலையற்றது என்று கூறினாலும் அதை உணரும் அறிவு உண்டாகாது", என்றான்.

35. இவ்வரச இயற்கை அற்பம் மற்றுஇதனால்
எய்திடும் துன்பினுக்கு அளவின்று
அவ்வகை அதனை யூகம்இன் மையினால்
அறிகிலீர் நீங்கள்இன்பு என்றே
எவ்வகை நினைந்தீர் இனிஎக் கால்உங்கட்கு
ஈதுஇன்பம் அலதுஎனத் தோன்றும்
ஒவ்வமற்று இதனுக்கு ஊகமே தோன்றாது
உங்களுக்கு உலகயூகு உதிக்கும்.

மேலும், "எனக்கு உரிய இவ்வாட்சி அற்பமானது. இதனால் அடையும் துன்பத்திற்கு அளவில்லை. அதனை நீங்கள் விவேகம் இல்லாமையால் அறியாமல் இருக்கின்றீர்கள். இவ்வுலக வாழ்க்கை இன்ப மயமானது என்று எப்படி நீங்கள் எண்ணுகிறீர்கள்? ஞான ஆராய்ச்சி இல்லாத உங்களுக்கு உலகம் இன்ப மயமானது என்ற எண்ணமே தோன்றும். நான் கூறியதை விடப் பொருத்தமான வேறு யுக்தி உங்களுக்குத் தோன்றாது."

### மகாராசன் துறவு பூணலும், மக்கள் புலம்பி அவனைத் தொடர்தலும்

36. என்று மற்று அநேகமா விரித்துஅரசன்
எடுத்துஅமைச் சர்கள்தமக்கு இயம்பி
நின்று பின்னவரை நிலும்என நிறுத்தி
நிதிதுனும் பொன்மனை விடுத்தே
சென்றுபின் நகர வீதியில் நடக்கத்
திரண்டுஅனை வர்களும்பின் தொடர்ந்து
வன்துயர் அடைந்து வாடியே மெலிந்து
வாரியின் ஓசையின் அழுதார்.

என்று மேலே கூறியபடி பலவாறு விரித்துரைத்தான் மகாராசன். அமைச்சர்களுக்கு உண்மை நிலையை எடுத்துக் கூறினான். பின் அவர்களை "நில்லும்" என்று சொல்லி, செல்வம் நிறைந்துள்ள பொன்னால் செய்யப்பட்ட அரண்மனையை விட்டுச் சென்றான். பின்னர் அந்நகர வீதியிலே நடந்து சென்றான். அரச கோலங்கள் எதுவும் இன்றித் தனியே நடந்து செல்லும் அரசனை நோக்கிய நகர வாசிகள் அனைவரும் திரண்டு அவன் பின்னே தொடர்ந்து சென்றனர். பெருந் துயரத்துடன் வாடிய உடலோடு அவர்கள் அழுத ஒலி கடலின் ஆரவாரம் போல் கேட்டது.

## தன்னைத் தொடர்ந்தவர்க்கு வேந்தன் சமாதானம் கூறுதல்

37. அவர்அவர் வினையின் அவர்அவர் வருவார்
அவர்அவர் வினைஅ ளவுக்கே
அவர்அவர் போகம் என்றதே ஆயின்
ஆருக்குஆர் துணையது ஆகுவர்கள்
அவர்அவர் தேகம் உளபொழுது உடனே
ஆதரவு ஆர்என நாடி
அவர்அவர் அடைதல் நெறிகன்மத்து அடையும்
ஆதரவு ஆதரவு ஆமோ.

அரசன் அந்நகர வாசிகளை நோக்கி, "என் மீது அன்புள்ள குடிமக்களே! அவரவர் செய்த வினையின் அளவுக்கு ஏற்றபடி உலகிடைப் பிறப்பார். அவரவர் வினையளவுக்கு ஏற்றபடியே சுகதுக்கங்களை அனுபவிப்பதும் நிச்சயம் என்று சாத்திரம் கூறுவது உறுதியாகும். அப்படி ஆனால் யாருக்கு யார் துணை ஆவார்கள்? இதனை நீங்கள் நன்கு ஆலோசனை செய்யுங்கள். அவரவர் உடல் உள்ள பொழுதே நமக்குத் துணையானவர் யார் என நாடி ஆராய்ந்து, உடனே அவரவர்கள் தத்தம் துணைவரைச் சேர்தல் முறையே. இப்படி முன் வினைப் பயனால் அடையும் ஆதரவு எல்லாம் உண்மையான ஆதரவு ஆகுமோ?" (ஆகாது என்பது கருத்து)

38. வினைஉள அளவும் கூடியே நிற்கும்
வினைஅகன் றிடில்பிரிந் திடுமால்
வினையி னால்வரும் ஆதரவினின் இயற்கை
மெய்யுணர்வு அத்தகை அலவே
வினைஇலை உங்கள் இடத்தில்நான் இருக்க
மெய்உணர்வு ஒன்றையே நாடி
வினைஅறு கானம் புகுதவே வேண்டி
விரும்பினேன் நீர்நிலும் இங்ஙன்.

"அந்த ஆதரவும் வினை இருக்கும் வரை சேர்ந்து நிற்கும்.

அந்த வினையும் தன் காலம் தீர்ந்து விட்டால் அகன்று விடும். இப்படிக் கூடிப் பிரிவது வினைப்பயனின் செயல். மெய்ஞ்ஞான உணர்ச்சி அத்தன்மை உடையதன்று, எப்பொழுதும் நிலையான ஆதரவைத் தரும். இப்பொழுது என் வினை தீர்ந்து விட்டமையால் உங்கள் அரசனாக உங்களுடன் சேர்ந்திருக்கும் நிலை இனி இல்லை. தத்துவ ஞான உணர்வு ஒன்றை மட்டுமே நாடித் தவம் செய்து வினைகளைப் போக்கிக் கொள்ள காட்டிற்குச் செல்ல விரும்புகிறேன். நீங்கள் இவ்விடமே நில்லுங்கள்."

### சுற்றத்தார் மகாராசனைத் தடுத்தல்

39. என்றுநல் வேந்தன் ஏதிலார் போல
ஏகினன் அனைவரும் கண்ணீர்
நின்றுஎதிர் சொரிய வாய்விட்டே அலறி
நின்றனர் தமர்கள்பின் ஏகி
இன்றுஎமை யாவர் காத்துஅளித் திடுவர்
இனியைநீ ஏகுதல் நீதி
அன்றுஎன உரைத்தார் அவர்களை நோக்கி
அரசன்ஈது உரைத்தனன் அன்றே.

இவ்வாறு நல்லன சொன்னான் அரசன். பின் அயலார் போலச் சென்றான். இதைக் கண்ட அனைவரும் அரசன் எதிர் நின்று, கண்கள் நீர் சொரிய வாய் விட்டு அழுது பின் தொடர்ந்து செல்லாமல் நின்று விட்டனர். பின் மன்னவனின் சுற்றத்தார் அவனை நெருங்கி, "நீ காடு சென்று விட்டால் எம்மைக் காத்து அளிப்பவர் யார்? இனியவனாகிய நீ எங்களை விட்டுச் செல்லுதல் தகுதி அன்று" எனக் கூறினர். அது கேட்ட அரசன் அச்சுற்றத்தாரை நோக்கிப் பின் வருமாறு கூறினான்.

### தன்னைத் தடுத்தோர்க்கு அரசன் சமாதானம் கூறல்

40. உறவுஆகும் எனஎனைநீர் தொடர்வது இயல்பு
அன்று ஆகும் உயிர்கட்கு எல்லாம்
உறவுஆகும் ஞானம்நனி பகை ஆகும்
அஞ்ஞானம் உய்த்து நோக்கின்

உறவுஆன அதை அடைந்து பகைஆன
இதைநீங்கி ஒருமை ஆக
உறவுஆதல் தனக்குத்தா னேஎனமற்று
உறவுவிடுத்து உறையும் என்றான்.

“நீங்கள் என்னை உறவினன் எனக் கருதித் தொடர்ந்து வருவது தகுதி அன்று. ஆராய்ந்து பார்க்கும்போது உலகில் தோன்றுகின்ற உயிர்களுக்கு எல்லாம் ஆத்ம ஞானம் ஒன்றே உறவாகும். அறிவின்மை என்னும் அஞ்ஞானமே மிகுந்த பகையாகும். எனவே நமக்கு உண்மையான உறவாக இருக்கின்ற மெய்ஞ்ஞானத்தை அடைந்து அஞ்ஞானத்திலிருந்து விடுபடுங்கள். ஏகாக்கிர சிந்தையுடன் தன்னை உணர்வதே நிரந்தரமான உறவு என்பதை உணருங்கள்,” என்றான்.

### தாய் தந்தையர் மகாராசனைத் தடுத்தல்

41. தந்தையாய் இருவரும்தம் புதல்வன்என்னும்
வாஞ்சையினால் தாம்பின் ஏகி
மைந்தவா எங்கள்இரு வரையும்எவர்
காப்பதற்கு வைத்தாய் நீதான்
சிந்தைதான் உனக்குஎங்கே மகனேஉன்
திருமுகத்தைத் திரும்பிக் காட்டாய்
நொந்துதான் பெற்றவயிறு எரிகின்றது
எனஉரைக்க நோக்கி மன்னன்.

பின்னர் அரசனின் தாய் தந்தையர் இருவரும் மகனின் துறவைக் கேட்டு மனம் பதைபதைத்துத் தம் புதல்வனாகிய வேந்தன் மேலுள்ள பாசத்தினால் அவன் பிரிவைப் பொறுக்க இயலாது, அவனைத் தொடர்ந்து சென்று “மைந்தனே இங்கே வா, வயதாகிய எம் இருவரையும் காப்பதற்கு எவரை இங்கே ஏற்பாடு செய்து வைத்திருக்கிறாய்? (ஏன் எங்களைப் பற்றி நீ சிந்தனை செய்யவில்லை) நீ எங்கள் பக்கம் திரும்பி உன் அழகிய முகத்தைக் காட்டுவாயாக. உன்னை வருந்திப் பெற்ற வயிறு எரிகின்றது” என்று சொன்னதும், அவர்களை நோக்கி மகாராசன் கூறத் தொடங்கினான்.

*(தொடரும்....)*

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### III/04/07 : ஐந்தவர் கதை

(**முற்குறிப்பு :** இக்கதைக் பெயரின் 'ஐந்தவர்' எனும் சொல்லால், எண்ணிக்கை குறிப்பிடப்படவில்லை. இது, 'இந்து' எனும் பெயருடைய ஒருவரது பத்து மகன்களுக்குப் பொதுவான குடும்பப் பெயராகும்.

"பிரம்மாவினால் படைக்கப்படாத ஒரு கதிரவன், இக்கதையை பிரம்மாவிற்குக் கூறினார்" என வசிட்டர், இராகவருக்கு உபதேசித்ததாக இக்கதை அமைக்கப்பட்டுள்ளது)

**கதைப்பகுதி :** தான் படைத்த அனைத்தையும் ஒடுக்கிய நான்முகன், ஓர்போது உறங்கச் சென்றார். உறக்கம் நீங்கிக் கண் விழித்த அவர், மற்றொரு படைப்பினைத் தொடங்க விரும்பி, வானத்தை நோக்கினார். அங்கு, தன்னால் படைக்கப்படாத பத்து புதிய அண்டங்களைக் கண்டார். தான் அறியாது அவை எவ்வாறு உண்டாயின என நினைத்து மனம் வியந்தார். புதிய அப்படைப்புக்களைச் சேர்ந்த ஒரு கதிரவனை அழைத்தார். கதிரவனும் அருகே வந்து நான்முகனை வணங்கினார். நான்முகனும், கதிரவனிடம், "நீ எவ்வாறு உண்டானாய் எனக் கூறுக" என்றார். கதிரவனும், "பெரியீர், இப்படைப்பினைப் பற்றித் தாங்கள் அறியாவிடில், நான் கூறுகிறேன்" எனத் தொடங்கி, கீழ்க்கண்டவாறு சொன்னார் :

கயிலை மலையைத் தன்னகத்தே கொண்ட நாவலந்தீவில், சுவர்ண சடம் எனும் வளமான பகுதி ஒன்று உண்டு. அங்கே, காசிப குலத்துப் பிறந்த ஓர் மறையவர் இருந்தார். அவர் பெயர் இந்து. அவருக்குக் குழந்தை இல்லை. இதனால் மிகவும் மனம் வருந்திய அவர், மனைவியோடு கயிலை மலைக்குச் சென்று கடுந்தவம் புரிந்தார். அவரது தவத்தால் ஈர்க்கப்பட்ட பரமன், அவர் முன் தோன்றி, யாது வரம் வேண்டுமெனக் கேட்டார். மறையவரும், தனக்குப் பத்து நன்மக்கள் வேண்டுமென்றார்.

தம்பதியர் சுவர்ண சடம் திரும்பினர். பின்னர் அவர்களுக்குப் பத்து மகன்கள் பிறந்தனர். இவர்கள் ஐந்தவர் எனப்பட்டனர். ஐந்தவர்களும் சிறுவயது தொடங்கி, மறை நூல்களனைத்தையும் முழுமையாகக் கற்றுத் தேர்ந்தனர். அதன்பின்னர், அவர்களது பெற்றோர் இறந்தனர்.

ஐந்தவர்கள் கயிலை மலையை அடைந்தனர். துயரமெல்லாம் நீங்கி, சிறிதும் துச்சமற்ற பெருமை நிலையைப் பெறுதல் எவ்வாறு? பெறுவதற்கெல்லாம் பெரியது யாது? அதற்கும் மேலானது யாது? அதனை எவ்வாறு அடையலாகும்? என்பன போன்ற விசாரணைகளைச் செய்தனர். சிற்றரசன், பேரரசன், இந்திரன் எனும் பதவிகள், ஒன்றை விட மற்றொன்று உயர்வுடையது எனவெல்லாம் சிந்தித்து, படைப்புத் தொழில் செய்யும் நான்முகனாக ஆவதே சாலச் சிறந்தது எனும் தெளிவு பெற்றனர்.

**"பிரமனாமே சிருட்டியெலாம் பிறப்பதுஎம்பால் என்றுள்ளே**
**திரமதான மனத்தாலே சிந்தித்து உடலில் சிந்தையற**
**மரமதென்ன இருத்தலுமே வருநாட் பலபோய்மனோபாவம்**
**உரமதாகி அயன்ஆனார் ஒருபதுஉலகம் உளதான"**

இவ்வாறு பத்து அண்டங்கள் உண்டாயின அதில் நானும் ஒருவன் எனக் கதிரவன் கூறிச் சென்றார்.

**தத்துவப் பகுதி:** முற்கதையில் (III/03/06) , நாம் காண்பன அனைத்தும் உலகம் மற்றும் உலகியல் (சம்சாரம்) என நினையாது, அவையெல்லாம் மனத்தின் விரிவு எனக் கொள்ள வேண்டும் எனக் கூறிய அதே கருத்து, இங்கேயும் வலியுறுத்தப்படுகிறது. இதனை,

**"மேவுகதையால் சிற்சத்திவிரி வேஉலகென்று அறுதிவரும்**
**வாவுமனமாம் சிறுமகவு மடமையாலே வெறும்பொய்யே**
**தாவுசகப்பேய் வரக்காணும் தனைப்போதிக்கில் அறிந்துஇடர்போம்**
**பாவும்விகாரம் பலசேரில் பவமாம் அவற்றை விடல்வீடாம்"**

எனக் கூறப்பட்டுள்ளது.

உலகியலுக்கு ஆட்படுவதாயினும் அல்லது அதற்கு எதிர் மாறாக, வீடுபேறு கிட்டுவதாயினும், இவற்றின் காரணம் நம் மனமே.

உலகியலிலிருந்து, மனம் மூலமாக வீடுபேறடைதல் எவ்வாறு என்பதற்கான தத்துவமும் கூறப்பட்டுள்ளது. (இது, அடுத்ததாக வரும் கதையின் முதல் பாடலில், இக்கதையை மேற்கோள் காட்டிக் கூறப்படுகிறது). விட்டுணுவிடம், பிரம்மா, "இனியான் படைக்க வேண்டிய அவசியம் ஒன்றையும் காணோமே" என்றார். அதற்கு பாற்கரன், "தாங்கள், படைப்பினை விளையாட்டாகச் செய்யலாம். பற்றின்றிய மனதால் செய்வது பந்த காரணமாகாது" என்றார். (பற்றின்றிய மனத்தோடு உலகினைப் பார்ப்பவனுக்கு வீடுபேறு கிட்டும் என இது உறுதி செய்கிறது)

இவற்றின் மூலமாக,

"கனமாமனத்தின் விரிவாலே காணுஞ்சகங்கள் உளவாம்"

என்பதனை, பிரம்மா புரிந்து கொண்டார் என, வசிட்டர் இராகவருக்கு உபதேசித்தார்.

(பிற்குறிப்பு : காலம் என்பது மனிதர்களுக்கும் பிரம்மாவுக்கும் வெவ்வேறு. நமது காலக் கணக்கின்படி 432 கோடி ஆண்டுகள், பிரம்மாவிற்கு ஒரு நாள் எனப்படுகிறது. காலம், வெவ்வேறிடத்து மாறுபடுவதாலும், ஒரே அளவைக்கு உட்படாததாலும், "காலம் சத்யமல்ல" எனும் உண்மை இக்கதையில் சுட்டிக்காட்டப் பட்டுள்ளது எனலாம்.

விட்டுணுவின் மனதில் பிறந்தவர் பிரம்மா என்றும், அவர்தம் மனதின் மகன் வசிட்டரெனவும் முற்கதைகளில் பார்த்தோம். பிரம்மாவே படைப்பின் காரணம், பிரம்மத்தின் மனமே பிரம்மா எனவும் முன்னர் **(II/01/03)** கூறப்பட்டது. ஆதலால், இக்கதையில் தான் அறியாது தன் தொழிலைச் செய்தது யாரென, பிரம்மாவே மனம் வியத்தல் ஒப்புமா எனாது, "மனதின் விரிவு இத்தகையது, மனதால் இடர் சேர்கிறது ஆனால் மனம் மித்தை" என்பனவற்றை நமக்குப் புரியவைத்தற்காக இவ்வாறு கூறப்பட்டுள்ளது எனக் கொள்ள வேண்டும்).

*(தொடரும்....)*

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

வலைசிலர் சுமந்து செல்ல வைத்திடு பார்வை ஆய
நிலைசிலர் சுமந்து செல்ல நெறிசிலர் காட்டிச் செல்லக்
கொலைபயில் விலங்கு தங்கும் இடம்சிலர் கூறிச் செல்ல
மலைபொரு திணிதோள் மன்னன் வடதிசைக்காடு புக்கான் 40

### வேறு

நொடிஎறிந்(து)உ ரப்புமள்ளர் நோன்றவெய்ய காட்டகத்(து)
ஒடிஎறிந்து வலைவிரித்(து)ஒ ருங்குசுற்று நாண் இழுத்(து)
அடிஎறிந்து பறைஎறிந்து துன்றுமாக்க லைத்தனர் 41

கோட்டுமால் யானையும்கொடுந்தொழிற்(று)அ ரக்குநேர்
ஓட்டுமான்கு லங்களும்உ ருத்(து)எழுங்கவயமும்
வாட்டுசூக ரங்களும்வ யக்குடாவ டிகளும்
காட்டுவாழ்வில் அங்(கு)அனைத்தும் ஒய்யெனக்க லைந்தவால் 42

வளைசிலைத்த டக்கைமள்ளர் நாண்எறிந்து வாளிதேர்ந்(து)
உளைதரப் புகுத்துவாரும் ஒய்எனக்கை வேல்எடுத்(து)
இளைபரித்த கா(டு) இரத்தம் ஆகநேர்எ றிந்துவாய்த்
தளைவிடுத்(து)உ ரப்புவாரும் ஆயினார்த ருக்கியே 43

சுரிகைகொண்டு குத்துவார்தொ டர்ந்துசென்று வாள் எடுத்(து)
இரியல்போக்கி டாதுவெட்டு வார்எதி ந்து தண்டினால்
பரியமொத்து வார்பிணித்த பாசவன்பி ணிப்புநீத்(து)
உரியநாய்பி டித்(து)அலைப்ப ஏவுவார்உ ருத்தரோ 44

கால்இழந்து கண்இழந்து கைஇழந்து மெய்ஒரு
பால்இழந்து கோடுஇழந்து பாடுஇழந்து வாடுமா
தோல்இழந்து தலைஇழந்து துடைஇழந்து மிடைமயிர்
வால்இழந்(து)அ லைந்துவீழ்ந்து சோருமாக்கள் எண்இல 45

அடுசரங்கள் அடைத்தலால் அயர்ந்துமுன் படுத்தவில்
கொடுமுரண்த பப்படுத்தல் கொண்டமாக்கள் ஒண்திறல்
படுசிலைத் தடக்கைவீரர் கொண்டுவந்து பற்பல
நெடுமரத்த கானகத்து வைத்தபார்வை நேருமே 46

வேடு கொண்ட வேல்கிழிப்ப மெய்கிழிந்(து)அ ரக்குநீர்
கோடுகொண்ட மால்யானை நின்றுசோர்தல் குலமரக்
காடுகொண்ட மாக்களிறு காட்டுதற்(கு)அ டைந்துமின்
ஊடுகொண்ட கார்இரத்த மாரிபெய்வ(து) ஒக்குமே 47

கானம்முட்ட வந்தமள்ளர் கோறலால்க ழன்றிடா
ஊனம்முட்ட வந்த(து) உள்அ கத்துவைத்(து)அ ளித்தும்இக்
கானமுட்(டு) அறுத்திஎன்று மதியைஅண்ம எழுதல்போல்
வானம்முட்ட மேல்எழுந்து துள்ளுமாங்க கணக்(கு)இல 48

சுருண்டவால்கு ரைக்கும்ஞாளி சுற்றம்வந்து பற்(று)உற
மருண்டசிந்தை யோடும்வேறு போக்(கு)இலாத மான்கணம்
தெருண்டமாத வத்திறம்செ லாமல்ஐம்பொ றிக்குலம்
வெருண்டசெய்கை செய்யஉறையும் ஒருவன்நெஞ்சம் வீழுமே 49

உய்திறத்தை நாடிநாற்பு றத்தும்ஓ(டு)உ ழைக்குலம்
மெய்சிலைக்கை வேடர்இட்ட வலைகடக்கும் ஏண்இலா(து)
ஒய் எனப்ப பதைக்கும்வெய்ய ஊழின்எவ்இ டத்தினும்
உய்எனச்சு ழன்றுபோதும் யாவரேசு கம்கொள்வார் 50

வேறு

வழுதியர் பெருமான் கைவில் வடிக்கணை ஒன்றுசென்று
முழுவலி மடங்கல் கீண்டு முதுகளி(று) உடம்பு போழா
உழுவைமெய் உருவி வன்றி உருவிமான் உருவி ஓடும்
பழு(து)அமை மனம்தான் தன்மாத் திரைதொறும் படர்தல் மான 51

ஒருகருங் களிற்றின் எற்றி உருவுவான் சென்ற வாளி
பருவரும் வேகம் தீர்ந்து பாதிஉள் புக்கு நிற்பப்
பொதுசினத்(து) அதுநேர் முட்டி முழுமையும் புகுத்திக் கொண்ட
திருவும்ஓர் சிறிய துன்பும் விருத்திசெய் இழுதை யார்போல் 52

தோகைமண் புடைத்துப் பாயும் சுடுசினப் புலியை மாறன்
ஈகைஅம் கரத்து வார்வில் ஏவும்ஏ ஒன்று போழ
வாகைஒன்(று) இன்றி வீழ்ந்து மடிந்தது வளவன் கொண்ட
ஓகைஅம் கொடியைக் கோதை ஒருகொடி வென்ற(து)'என்ன 53

தூரியத் துவைப்புத் துஞ்சா வாயிலான் தொடுத்துப் போக்கும்
கூரிய பகழி பாயக் கோட்டுவெங் களிற்றி யானை
வீரிய மேனி நெய்த்தோர் வீழ்ந்து சே ந்(து)அதனால் அக்கான்
சீரியர் புகழ்செங் காடேசிவ்லிங்கக் குறைஒன்(று) உண்டால் 54

குலவுசெங் கோலான் ஏவும் கூரிய கொடுங்கோல் பாய
நிலவும்ஓர் கோடு நீத்த நெடுங்கைமால் யானைஒன்(று)ஆங்(கு)
உலவும்ஓர் காட்சி சேந்த கான்என அதனை ஓர்ந்து
வலவுமா ஒன்றுபூசை வயக்குவான் பயில்தல் காட்டும் 55

தேம்புதல் இல்லா மாறன் சிலைஉயிர்த் திடலால் போதும்
கூம்புதல் இல்லா வண்டு தாமரை அகத்தும் கூடும்
ஆம்பலின் அகத்தும் வீழும் அவைஅதி சயம்ஆம் கொல்லோ
மேம்படு சிவப்புக் கொண்ட வேங்கையின் அகத்தும் வீழும் 56

அல்பொலி கண்டர் பூந்தாட்(கு) அன்புவைத்(து) உலகம் ஓம்பும்
வில்பொலி தடந்தோள் செம்மல் வீரபாண் டியன்என் பான்அச்
சொற்பொலி காட்டின் மள்ளர் சூழ்தரக் கொடுமா எல்லாம்
கொற்பொலி வாளி என்னும் கூற்றிற்கு விருந்(து) இட் டானே 57

இன்னணம் வேட்டை ஆடும் ஏல்வையின் ஒருமான் தப்பித்(து)
அன்னமும் விடாது சூழ்ந்து தடுத்திடு வலையும் தாண்டி
மன்னவன்இ ராமன் தன்னை அலைத்தஓர் மானே என்னப்
பன்னருங் கடுப்பில் பாய்ந்த(து) உணர்ந்தனன் பாண்டி வேந்தன்58

எத்துணை வழிச்சென் றேனும் இறுப்பன்இம் மானைன்று
கைத்தனி வில்லே கொள்ளான் கட்கமே துணையாக் கொண்டு
தொத்தலர் நெருங்கும் காட்டில் துனைந்தொரு தமியே சென்றான்
பைத்தநீர் உலகம் எல்லாம் பரித்திடும் தடந்தோள் அண்ணல் 59

சற்(று)இடம் வெளிப்பட்(டு) ஓடும் சற்(று)இடம் மறைந்து செல்லும்
சற்(று)இடம் வெகுண்டு பார்க்கும் சற்(று)இடம் எழுந்து தாவும்
சற்(று)இடம் மெல்லச் செல்லும் சற்(று)இடம் விரைந்து செல்லும்
சற்(று)இடம் முழங்கும் இவ்வா(று) அரசும்பின் சாரச்சென்று 60

தரைபுகழ் சிறப்பு வாய்ந்த சமிவனத்(து) ஊடபுக்கு
விரைதர மறைந்த தாக வேந்தனும் இறும்பூ(து) எய்தி
புரைஅற முன்னம் செய்த புண்ணிய வசத்தால் அந்தக்
கரைஅறு தருக்கள் மல்கும் கானத்தைக் கண்ணுற் றானே 61

வழிவரும் இளைப்பி னாலும் மான்அகப் படாமையாலும்
கழிபெரு வருத்தம் உற்ற கைக்கும்பூ அலங்கல் மார்பன்
பழிதபும் அனைய கான வளம்பல பார்த்துப் பார்த்தாங்(கு)
இழிவரும் உவகை பொங்க ஏறுபோல் உலவா நின்றான் 62

புரசு முந் திரிகை தெங்கு போந்துமா மகிழ்இ ருப்பை
அரசுமந் தாரம் வெட்சி ஆசினி விளமால் ஊரம்
பரசுமா இலிங்கம் கோங்கு பாடலம் அலரி புன்னை
விரசுமற்(று) உள்ள ஆல விருக்கங்கள் பலவும் கண்டான் 63

பிறங்கிய மாயைமாயாப் பிரதிவிம் பரும்இன்(று) எண்ணி
வழங்கினர் சமய தேவர் இல்லைஆ னாற்போல் இந்த
நிறங்கிளர் புவியும் இம்மண் நிறைந்தகா னமும்இன்(று) எண்ணில்
புறங்கிளர் கானும் இன்றால் என்(று)இறும் பூது கொண்டான் 64

வருசிதா பாச சீவன் மருவுதன் உடம்பு மட்டும்
பொருவறக் கலத்தல் போலும் பல்புகல் ஈசன் போலும்
ஒருதரு நிழல்ஓர் பொய்கை இடத்துமற்(று) ஒன்றன் நீழல்
பருவரல் ஒழிக்கும் பொய்கை பலஇனும் கலப்பக் கண்டான் 65

கொடுமருப்(பு) ஏனம் ஒன்று கோரையின் கிழங்கு கொள்வான்
நெடுநிலம் அகழ்தல் நோக்கி நிலம்புணர் ஏனம் முன்னாள்
அடுமழுப் படையோன் பாதம் காணமண் அகழ்ந்து காணா(து)
இடுகலில் இதுகா ணும்போல் இருந்த(து)என்(று) எண்ணம் கொண்டான்
66

தருப்பல செறிந்து பைத்த தழைசெறிந் திடுதல் ஆலற்(கு)
இருப்பிடம் ஆகும் காட்டில் எண்இலா அரவம் ஈன்ற
நெருப்(பு)அவிர் மணிஆங்(கு) ஆங்கு நிலாய்த்(து) உணங்(கு) அறலைப் போக்கும்
திருப்பொலி(வு) உணர்ந்து மண்பொன் சேர் ந்த(து) என் என்(று) தேர்ந்தான்
67

கலிகெழு மடங்கல் தாக்க மதுகளிற்(று) உலவை விண்டு
பொலிதரு முத்தம் சிந்திப் பொலிவிறல் வெய்யோன் அன்றி
மலிபனிக் கதிரும் இந்த மண்இடை மேயதால்என்(று)
ஒலிகழல் காலான் உள்ளத் தூ(டு)இறும் பூது பூத்தான் 68

வஞ்சித்த மானால் வந்த வருத்தம்எள் துணையும் இன்றிக்
குஞ்சித்த மலர்த்தாட்(கு) அன்பு கொண்டபாண் டியன்வா னாடன்
நம் சித்(து)அ வாவும் கானத்(து) ஆயிடை ஒருசார் சென்று
செஞ்சித்த முனிவர் போற்றத் திகழ்ம்துப் பொய்கை கண்டான் 69

ஒருதரம் மூழ்கி னோர்க்கும் உற்றபல் பாவம் போக்கும்
நிருமல தீர்த்தம் ஆகி நிகழும்மங் கலமாய் உள்ள
பொரு(வு)இல் அத் தீர்த்தம் கண்டு புந்தியின் உவகை பூப்பப்
பருவரல் ஒழியத் தோய்ந்தான் பாண்டிநா(டு) ஆளும் வேந்தன் 70

நிலவுவெண் நீறுபூசி நித்திய கருமம் முறறிக்
குலவும்ஐந்(து) எழுத்தும் எண்ணிக் குடைந்தஅத் தடத்தின் பாங்கர்க்
கலவுபல் விருக்கத்(து) உள்ள கனிசில கவர்ந்(து)அ ருந்திப்
புலவுவேல் மன்னர் மன்னன் ஒருதரு நீழல் புக்கான் 71

அத்தரு நிழலின் ஓர்பால் அம்துகில் விரித்து மேலாற்
கத்திஓர் பாங்கர் வைத்துக் கண்துயில் கொண்டான் மன்னன்
உத்தமன் கவர்ந்து வாள்ஆங்(கு) ஒருபுலி தோற்றிச் செய்த
வித்தக ஆடல் ஒன்(று)உண்(டு) எனத்தமிழ் முனிவன் விண்டான்72

தழைதரும் உவகை பூப்பச் சைமினி முனிவன் போற்றி
விழைதரு பரமன் வாளைக் கவர்ந்துவெம் புலியைத் தோற்றிக்
குழைதரச் செய்த லீலை யா(து)அது கூறுகென்ன
மழைதவழ் பொதியம் வைகும் மாமுனி உரைக்கல் உற்றான் 73

***வீரபாண்டியன் சமிவனம் அடைந்த படலம் நிறைவுற்றது***

*(தொடரும்....)*

# சிவமே செம்பொருள்

புலவர். ஆறு.மெ. மெய்யாண்டவன்.

அன்னைத் தமிழின் அருமைக்கும் பெருமைக்கும் ஓர் உரைகல்லாய், பக்திச்சுவை நனி சொட்டச் சொட்ட மணிவாசகர் பாடியருளிய திருவாசகம் விளங்குகிறது. எட்டாம் திருமுறையாய் விளங்குகிறது திருவாசகம்; திருமாலுக்கும் நான்முகனுக்கும் எட்டாக் கனியாய் இலங்கிய அந்தச் சிவம் மணிவாசகராம் மாணிக்க வாசகருக்கு எட்டும் கனியாய் விளங்கினார் என்பது அவர்பாடிய ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கும் திருவாசகத்தால் உணர முடிகிறது. அதனால்தான் மேலை நாட்டறிஞர் போப்பையர் "மாணிக்க வாசகரின் ஆன்ம அனுபவச் செழிப்பில் விளைந்ததம் அனுபவப் பாடல்களே திருவாசகம்" எனப் புகழ்ந்துரைத்தார், கற்பனைக்களஞ்சியம் துறைமங்கலம் சிவப்பிரகாச சாமிகள் தம் நால்வர் நான் மணி மாலையில் திருவாசகம் இங்கு ஒரு கால் ஓதில் கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள் தொடுமணற்கேணி நீர்சுரப்பது போல் கண்ணீர் சொரியும் என்கிறார், திருவருட்பிரகாச வள்ளலாரும் திருவாசகத்தை நாம் ஒன்றிப்பாடும் போது நற்கருப்பஞ்சாற்றில் தேனும் பாலும், ஊனும், உயிரும் கலந்து உண்ணும் இனிப்புப் போல உவட்டாமல் இனிக்கும் என்கிறார், திருவாசகக் கட்டமைப்பே சிவமே செம்பொருள் என்பதை உணர வைக்கும் தன்மையுடையது. அது எவ்வாறு என்பதைக் காண்போம்.

"நமச்சிவாய வாழ்க" எனும் சிவபுராணம் சிவமாம் இறைஇயல்பைக் கூறும், கீர்த்தித் திருவகவல் உயிரியல்பின் உயர்வை உணர்த்துகிறது. திருவண்டப் பகுதி உயிர்களுக்கு ஏற்படும் தடைகளை விளக்கும்; போற்றித் திருவகவல் உயிர்களின் தடைகளை நீக்கும். இந்த நான்கு பாடல்களும் போல் திருச்சதகம், பக்திச்சிந்தனைகளின் தொகுப்பு; இப்படி மொத்தம் 51 தலைப்புகளும் சிவத்தின் சிறப்பை, இயல்பை வெவ்வேறு வகையாய் விளக்கி உயிர்களை ஈடேற்றம் செய்ய வல்ல நூல் திருவாசகம். அதனால் இதனைத் தேனினும் இனிக்கும் திருவாசகம் என ஆன்றோர் புகழ்ந்துரைப்பர். இத்திருவாசகத்தின் சிறப்பை மேலைநாட்டறிஞர் ஜி.யு.போப்பையர் உணர்ந்தார். அதன் பெருமையை ஆங்கிலத்தில்

மொழி பெயர்த்து உலகறியச் செய்தார். திருவாசகத்தைத் "தென்னிந்தியத்திருமறை" என உரைத்தார். திருவாசகத்தின் இன்பத்தை உணர்ந்து நுகரவேண்டுமானால் அது தமிழனால்தான் முடியும் எனக் குறிப்பிட்டார். எட்டுத் திங்கள்களில் நற்றமிழைக் கற்றதால் அவரால் இப்படிக் கூற இயன்றது.

இத்தகு திருவாசகத்தில் சிவானுபவத்தில் மாணிக்கவாசகர் திளைத்த இயல்பை ஆனந்தாதீதம் எனும் தலைப்பில் விவரிக்கிறார். இது திருச்சதகத்தின் 10ஆம் தலைப்பில் அமைந்துள்ளது. மாணிக்கவாசகர் சிவத்தில் ஊறித்திளைத்து உருகும் காட்சி சிவமே செம்பொருள் என்பதைத் தெளிவுற விளக்கும்.

மாறுபாடில்லாப் பெருங்கருணை வெள்ளமாய் அருள்செய்கின்றாய், முந்தி வந்து உன்னுடைய தாமரை மலரின் தன்மை கொண்ட திருவடிகள் இரண்டிடத்தும் வேறுபாடில்லாப் பரிபக்குவம் பெற்ற மெய்யடியார் உன் மெய்ம்மையை உணர்ந்தனர். ஈறு இல்லாத நீ ஒளியுடைய மானுட வடிவந்தாங்கி எளியனாய் என்பால் எழுந்தருளினாய், என்பால் கருணை கொண்டு காட்சி கொடுத்தாய். உடையா உள்ளம் உடைய நாயேன் நேரில் வந்தும் உன்னை உணராது இழந்தேன், அது என் தீவினையே என்கிறார்.

மாறிலாதமாக் கருணை வெள்ளமே
வந்து முந்திநின் மலர்கொள் தாளிணை
வேறிலாப் பதப்பரிசு பெற்றநின்
மெய்ம்மை அன்பருள் மெய்ம்மை மேவினார்
ஈறிலாதநீ எளியை யாகிவந்
தொளிசெய் மானுடமாக நோக்கியும்
கீறிலாத நெஞ்சுடைய நாயினேன்
கடையனாயினேன் பட்ட கீழ்மையே

இப்பாடலில் மாணிக்கவாசகர் முன் ஒளி செய் மானுட வடிவில் காட்சி கொடுத்துள்ளார். ஆயினும் நாயேன் உணரவில்லை என்கிறார்.

வானுறை தேவரும் அறியமுடியாத நீ, வேதங்களின் இறுதி நீ, ஆனாலும் அவற்றாலும் படித்து உணர இயலாதவன் நீ, மற்ற உலகத்தாராலும் அறிய முடியாத நீ அடியேனை இனிமையுடன் ஆண்டு

கொண்டாய். என் ஊனுடம்பைக் கூத்தாடச் செய்தாய். அடியேன் உள்ளம் நெகிழ்ந்து உன்னைச் சுவைக்கச் செய்தாய். மெய்ஞ் ஞானத்தால் உண்டான பேரானந்தத்தால் என்னைக் கூத்தாடச் செய்தாய். உலகப் பற்றால் என்னிடம் ஏற்பட்ட அஞ்ஞானம் அகன்றது. மெய்ஞ்ஞானம் தோன்றியது. இக்கருத்துகளின் மூலம் சிவனைச் செம்பொருளாய் உள்ளத்துள் உணர்ந்து திளைத்து அதில் மகிழ்ந்துள்ளார். "ஞானத்தால் தொழுவார் சிவ ஞானிகள்" என்பார் அப்பரடிகள். மெய்ஞ்ஞானத்தில் சிவனைச் செம்பொருளாய் உணர்ந்தவர் மாணிக்க வாசகர். திருநாவுக்கரசர் இறைவனை உணர்ந்தது தொண்டுநெறி. மாணிக்கவாசகர் உணர்ந்தது ஞான நெறி. (ஞான மார்க்கம்) அப்படி அவர் சிவத்தை உணர்ந்து மகிழ்ந்ததை இப்பதிகம் அற்புதமாய் உணர்த்தும்.

வானநாடரும் அறியொணாதநீ
மறையிலீறு முன் தொடரொணாத நீ
ஏனை நாடரும் தெரியொணாத நீ
என்னை இன்னிதாய் ஆண்டு கொண்டவா
ஊனை நாடகம் ஆடுவித்தவா
உருகி நான் உனைப்பருக வைத்தவா
ஞான நாடகம் ஆடுவித்தவா
நையவையகத் துடைய விச்சையே

"வையகத்துடைய விச்சையே நைய ஞான நாடகம் ஆட்டு வித்தவா" என இவ்வரிகளை இணைத்துப் பொருள் அறிந்தால் பேரின்பத்தில் திளைக்கலாம். நாமும் சிவமாகலாம், சிவமே செம்பொருள் என உணரத் திருவாசகம் ஓர் உரைகல் என முன்பே குறிப்பிட்டது இங்கு நினைவு கூரத்தக்கது. ஆனந்தம் - பேரின்பம் அதீதம் - பெருக்கம் அதாவது ஆனந்தாதீதம் என்பதற்குப் பேரின்பப் பெருக்கம் எனப் பொருள் கூறலாம். பேரின்பத்தை அறிய இயலாது. உணர இயலும். பேரின்பத்தை முழுமையாகச் சொல்ல இயலாது. ஆனால் உணர்ந்து சுவைக்கத் தக்கது. காற்றைக் காண இயலாது. ஆனால் உணர்கிறோம். இதுவே சிவானுபவம். சிவானுபவத்தால் மாணிக்கவாசகர் சிவமே செம்பொருள் என உணர்ந்தார். நாமும் உணர்வோம். சிவாய நம திருச் சிற்றம்பலம்.

# மடாலய நிகழ்வுகள்

31.12.2014 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் நாட்டுநலப்பணித் திட்டம், செஞ்சுருள் சங்கம், இளம் செஞ்சுருள் சங்கம் ஆகிய அமைப்புகளின் சார்பில் தூய்மை இந்தியா என்னும் பணியின் கீழ், கல்லூரிக்கு வர அமைந்துள்ள சாலைகள் மற்றும் கல்லூரி வளாகப் பகுதிகள் சுத்தம் செய்யப்பெற்றன. கல்லூரி முதல்வர் டாக்டர். சே. குமரப்பன் நிகழ்விற்குத் தலைமை தாங்கினார். சீர்வளர்சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள் நிகழ்வினைத் தொடங்கி வைத்தார்கள். கல்லூரிப் பேராசிரியர்களும் மாணவர்களும் இப்பணியில் ஈடுபட்டனர்.

03.01.2015 அன்று திருவண்ணாமலை ஈசான்ய ஞான தேசிகர் குரு பூஜையும், 09.01.2015 அன்று காரைக்குடி ராமசாமி ஞானதேசிகர் (4ஆவது பட்டம்) குருபூஜையும் 11.01.2015 அன்று இயற்பகை நாயனார் குருபூஜையும் 18.01.2015 அன்று சாது பரமானந்த சுவாமிகள் குருபூஜையும் சிறப்பாக நடைபெற்றன.

09.01.2015 அன்று நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியின் விளையாட்டு விழா சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலையில் சிறப்பாக நடைபெற்றது.

10.01.2015 அன்று காலை 9 மணிக்கு நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் இரண்டாமாண்டு விளையாட்டு விழா நடைபெற்றது. தொடக்க விழாவிற்குக் கல்லூரி முதல்வர் டாக்டர். சே. குமரப்பன் தலைமை ஏற்றார். சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலை வகித்து ஆசி வழங்கினார்கள். கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி முதல்வர் டாக்டர் மூர்த்தி விளையாட்டு விழா நிகழ்ச்சிகளைத் தொடங்கிவைத்தார். கல்லூரியின் ஆங்கிலத் துறைத் தலைவர் பேராசிரியர் வி. பாலசந்திரன் அனைவரையும் வரவேற்றுப் பேசினார்.

பின்னர் விளையாட்டுப் போட்டிகள் நடைபெற்றன. மாணவர்கள் மிகுந்த ,ஆர்வத்துடன் கலந்துகொண்டனர். போட்டிகளில்

வெற்றிபெற்றவர்களுக்குப் பரிசளிப்பு விழா 12.30 மணிக்கு நடைபெற்றது. சீர்வளர்சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள் பரிசுகளை வழங்கி ஆசியுரை வழங்கினார்கள். தமிழ்த்துறைத் தலைவர் ம. கார்மேகம் வரவேற்புரை நல்கினார். விழா நிறைவில் பேராசிரியர் சீதாலெட்சுமி நன்றி கூற நாட்டுப்பண்ணுடன் விழா இனிதே நிறைவுற்றது. விழா நிகழ்ச்சிகளைப் பேராசிரியர் K. கலா தொகுத்து வழங்கினார்.

12.01.2015 அன்று சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழக அறநிலைக் கல்வி நிறுவனங்கள் சார்பில் ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் பொதுமக்களுக்குமாகக் கோலப்போட்டி நடத்தப்பெற்று வெற்றி பெற்றோருக்குப் பரிசுகள் வழங்கப் பெற்றன.

13.01.2015 அன்று அனைத்துக் கல்வி நிறுவனங்கள், கோவிலூர் மடாலயம் சார்பில் சமத்துவப் பொங்கல் நிகழ்ச்சி கொண்டாடப் பெற்றது. ஆசிரியர்கள், மாணவர்கள் அனைவரும் கலந்து கொண்டு சிறப்பித்தனர். கோவிலூர் ஆதீனம் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் பொங்கல் விழாவினைத் தொடங்கி வைத்ததோடு, நிறைவாக வழிபாடு நடத்தி அன்பர்களுக்கு நல்லாசி வழங்கினார்கள்.

18.01.2015 அன்று கோவிலூர் மடாலயம், கலாக்ஷேத்ரா பப்ளிகேஷன்ஸ் இணைந்து காரைக்குடி கண்ணதாசன் மணி மண்டபத்தில் பழனித் தைப்பூசமும் நகரத்தார் காவடிகளும் என்ற ஆவணப்படக் குறுந்தகடு வெளியிட்ட நிகழ்ச்சி நடைபெற்றது.

சீர்வளர் சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் தலைமை தாங்கினார். ராயவரம் மு.அ.மு. பழனியப்ப செட்டியார் குறுந்தகட்டை வெளியிட, பழனிப் பாதயாத்திரையை வழிநடத்திச் செல்கின்ற குருமார்கள் குறுந்தகட்டைப் பெற்றுக் கொண்டனர். இறைநீதி அண்ணல் நீதியரசர் டாக்டர் எம். சொக்கலிங்கம் சிறப்புரையாற்றினார். பாதரக்குடி ஆதீனம், துளாவூர் ஆதீனம் கவிஞர் செல்வ கணபதி ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

கோவிலூர் – காரைக்குடி – 630 307.

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

தொலைபேசி : 04565 - 234 523 கைபேசி : 94434 42361

**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

**B.A., English**
**B.Sc., Computer Science**
**B.Com.,**
**B.Com. (C.A).,**
**B.B.A.,**
**B.Sc., Maths**
**B.Sc., Visual Communication**



**திரைக்கதை, வசனம் எழுதுதல்,**

**ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,**

**இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்**

**போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரியவாய்ப்பு !!**

**B.Sc. Visual Communication.,**

(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாக தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

விண்ணப்பங்கள் கிடைக்குமிடம் : நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி
கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளி
கோவிலூர்